SHIVAJI

TAMIL WEEKLY

# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

# இயற்கை எழில்



கோடை வெப்பத்தினின்று மக்களுக்குத் தஞ்சமளிக்கும் ஒவ்வொரு மலை வாசஸ்தலமும் ஒவ்வொரு வகையில் தனிச் சிறப்புப் பெற்றவையாகும். டார்ஜிலிங்கில் வெண் பனி மூடிய வானளாவிய சிகரங்களையும், மலை வாசஸ்தலத்தையும் படத்தில் காணலாம்.

## நமது கடமை

மிகப் பெரிய நாடான நம் நாட்டில் எத்தனையோ பெரிய பிரச்னைகள் இருக்கின்றன. 43 கோடி மக்கள் வாழும் நாடு இது. மகாத்மாவின் வழி நடந்து சுயராஜ்யம் பெற்றோம். செல்வமிகுந்த நாடெனினும் ஏழைகள் பலர் இருப்பதால் அனைவருக்கும் உணவு உடை வசதி செய்து தருவது மிகப் பெரிய பிரச்னை என்றாலும் அதை தைரியமாக மேற்கொண்டுள்ளோம்.

எத்தனை இடர்கள் வந்தாலும் சமாளித்துத் தான் முன்னேற வேண்டும். துன்பமும் எதிர்ப்பும் நமக்குப் புதிதல்ல எந்தஎதிர்ப்பையும்சகித்துக் கொள்ள மகாத்மா நமக்குப் பயிற்சி அளித்து விட்டுச் சென்றார். புதிதாக பாரம் தூக்குபவன் பாரம் தூக்க கஷ்டப்படுவான். பல வருடம் துக்கி பழகியவன் பாரத்தைக் கண்டு அஞ்சுவானா. எனவே எதிர்ப்பு கண்டு நமக்கு கவலையில்லை. இவன் மலையாளி, இவன் இந்து இவன் வட நாட்டான், இவன் முஸ்லீம், என்று சண்டை போட்டுத்தான் 200 வருடங்கள் அடிமையாக இருந்தோம். நாடு ஒன்று, நாமெல்லாம் இந்தியர் என்ற எண்ணத்தை ஏற்படுத்த மகாத்மா அரும்பாடுபட்டு ஓரளவு செயலாக்கினார். நாடு சுதந்திரம் பெற்றது. மீண்டும் பழைய கேடுகளை புகுத்த பலர் வேலை செய்கின்றனர். ஒருவரை ஒருவர் வெறுத்துக் கொண்டு துன்புறுகின்ற பிளவு மனப்பான்மையை அடியோடு ஒழிக்க வேண்டும். நம் காலத்துடன் இக் கேடுகள் ஒழியவேண்டும். நீண்ட காலம் வாழவேண்டிய குழந்தைகள் இந்தச் சண்டையைப் பார்த்து அந்தப் பிஞ்சு மனங்களில் பிரிவினை மனப்பான்மை தோன்றிவிடாமல் காக்க வேண்டியது நமது கடமை.

—முதலமைச்சர் காமராஜ்

27—5—1962

# The Trichinopoly Vysya Bank Limited, Trichinopoly.

**30 th Balance Sheet as at 31st December 1961.**

| Previous Year Rs. nP. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. nP. | Total Rs. nP. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| ,00,000 00 | Authorised Capital 4,000 Shares of Rs. 50 each ... | 2,00,000 00 | |
| ,00,000 00 | Issued Capital 2,000 Shares of Rs. 50 each ... | 1,00,000 00 | |
| ,00,000 00 | Subscribed Capital 2,000 Shares of Rs. 50 each ... | 1,00,000 00 | |
| ,00,000 00 | Amount called up at Rs. 50 per Share on 2,000 Shares ... | | 1,00,000 00 |
| | 2. RESERVE FUND AND OTHER RESERVES: | | |
| 62,447 85 | i. Reserve Fund ... | 68,500 00 | |
| 2,500 00 | ii. Building Fund ... | 2,500 00 | |
| 2,800 00 | iii. Security Depreciation Peserve ... | 2,800 00 | |
| | | | 73,800 00 |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| ,30,354 57 | i. Fixed Deposits .. | 2,13,046 37 | |
| 44,000 00 | ii. Overdue Fixed Deposits ... | 38,695 82 | |
| 71,583 51 | iii. Savings Bank Deposits ... | 49,523 95 | |
| 37,532 80 | iv. Current Accounts ... | 19,671 66 | |
| 24,613 04 | v. Provident Fund Deposits ... | 26,968 32 | |
| 10,000 00 | vi. Staff Security Deposits ... | 10,000 00 | |
| | | | 3,57,906 12 |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS, Etc. | | |
| | i. In India Nil | | |
| | ii. Outside India Nil | | |
| | PARTICULARS:— | | |
| | i. Secured (stating nature of security) Nil | | |
| | ii. Unsecured Nil | | |
| | 5. BILLS PAYABLE:— Nil | | |
| | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE (AS PER CONTRA) | | |
| | i. Payable in India ... | | 84 00 |
| | ii. Payable outside India Nil | | |
| | 7. OTHER LIABILITIES:— | | |
| 2,734 21 | i. Unpaid Dividends ... | 3,014 49 | |
| 41 57 | ii. Auction Balance ... | 21 70 | |
| | iii. Suspense ... | | |
| 1,253 00 | iv. For Expenses ... | 346 00 | |
| 12,208 04 | v. Accrued Interest on Deposits ... | 3,465 39 | |
| 2,032 50 | vi. Interest on overdue Fixed Deposits ... | 1,658 75 | |
| 473 57 | vii. Charity Fund ... | 448 57 | |
| 8,052 96 | viii. Provision for Incometax ... | 1,157 37 | |
| 2,740 37 | ix. " Bad Debts ... | 2,740 37 | |
| 2,140 00 | x. " Security Depreciation ... | 1,630 75 | |
| | xi. Advance Interest (not refundable) | 1,441 46 | |
| | | | 15,924 85 |

| Previous Year Rs. nP. | PROPERTY AND ASSETS | Amount Rs. nP. | Total Rs. nP. |
|---|---|---|---|
| 97,321 02 | 1. CASH:— In hand ... | | 40,072 54 |
| | 2. BALANCES WITH OTHER BANKS (SHOWING WHETHER ON DEPOSITS OR CURRENT ACCOUNT):— | | |
| 2,40,065 92 | i. In Current Account ... | 55,615 49 | |
| | ii. In Deposit Account ... | Nil | 55,615 49 |
| | In India ... Rs. 55,615—49 | | |
| | Outside India ... Nil | | |
| 75,000 00 | 3. MONEY AT CALL AND SHORT NOTICE: ... | | |
| 1,39,718 75 | 4. INVESTMENTS AT COST: | | |
| | i. Securities of the Central and State Government... Market value of Government Securities Rs. 44,455—00; Face Value Rs. 45,000—00 | | 44,925 00 |
| | ii. Shares (Classifying into preference, Ordinary, Deferred and other Classes of shares and showing separately shares fully paid up and partly paid up) Nil | | |
| 10,000 00 | iii. Debenture or Bonds Nil | | |
| | iv. Other Investments in India Staff Security deposits invested in Scheduled Bank: | | 10,000 00 |
| | v. Gold Nil | | |
| | 5. ADVANCES:— (Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the Auditors) | | |
| 4,47,276 06 | I. LOANS, CASH CREDIT, OVERDRAFT ETC. | | 3,88,010 00 |
| | i. In India Rs. 3,88,010—00 | | |
| | ii. Outside India Nil | | |
| | II. BILLS DISCOUNTED AND PURCHASED: | | |
| | i. Payable in India Nil | | |
| | ii. Payable outside India Nil | | |
| | PARTICULARS OF ADVANCES: | | |
| | (i) Debts considered good in respect of which the Banking Company is fully secured ... | 3,57,010 00 | |
| | (ii) Debts considered good for which the Banking Company holds no other security than the debtors personal security ... | 31,000 00 | |
| | (iii) Debts considered good secured by the personal liabilities of one or more parties in addition to the personal security of the Debtors Nil | | |
| | (iv) Debts considered doubtful or bad (not fully provided for) Nil | | |
| | (v) Debts due by directors or officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons. Rs. 1,100 (Fully Secured) | | |
| | (vi) Debts due by Companies or firms in which the directors of the Banking Company are interested as directors, partners or managing agents or in the case of private Companies as members Nil | | |
| | (vii) Maximum total amount of advances including temporary advances made at any time during the year to directors or managers or officers of the Banking company or any of them either severally or jointly with any other persons Rs. 1,100 | | |
| | (viii) Maximum total amount of advances including temporary advances granted during the year to the Companies or firms in which the directors of the Banking Company are interested as directors, partners, or Managing Agents or in the case of private Companies as members Rs. 8,000 | | |
| | (ix) Due from Banking Companies Nil | | |
| | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION (AS PER CONTRA) | | 84 00 |
| | i. Payable in India 84 | | |
| | ii. Payable outside India Nil | | |
| | 7. CONSTITUENTS' LIABILITIES FOR ACCEP- | | |

## THE TRICHINOPOLY VYSYA BANK LTD., TRICHINOPOLY.

ESTD. 1931,

Thirtieth Report of the Board of Directors to be placed before the Annual General Meeting of the Shareholders to be held at 3-30 p. m. on Thursday the 15th March 1962 at the Registered office of the Bank at No. 65, Big Chetty Street, Tiruchirappalli.

The Board of Directors have pleasure in submitting herewith the audited Balance Sheet and Profit and Loss Statement and the Auditor's Report for the year ending 31—12—1961. The Directors propose to appropriate the net profit as follows:—

Net Profit for the year 1961 Rs. 5209—44.

Appropriation thereof:—

(a) Dividend at 3½% on the paid up Capital (subject to tax) Rs. 3500—00

(b) Reserve Fund as per Sec. 17 of the Banking Companies Act. 1949 Rs. 1254—94

(c) Legal Adviser's fees Rs. 100—00

(d) Bonus to Staff Rs. 354—50

Rs. 5209—44

1. Owing to heavy withdrawals of deposits there has been a fall in the advances and a resultant fall in income. Further, owing to an allocation of advance interest between the years 1961 & 1962, made in the accounts, under instructions from the Reserve Bank of India, the income of the year has slightly decreased. The working expenses had been kept at a minimum: the directors have also reduced the rate of their sitting fees from Rs. 10/- to Rs. 5/- per meeting with effect from 30-5-1961.

2. The loss of Rs. 509—25 incurred by the sale of Government Securities to the tune of Rs. 75,000 has been adjusted from the provision of Rs. 2140 made for security depreciation.



# உலகத் தலைவர்கள்

## டிஜிலாஸ்

மே மாதம் 14 ஆம் தேதியன்று யூகோஸ்லோவியாவின் மாஜி உப ராஷ்டிரபதியாகிய மிலோவன் டிஜிலாஸ் எனபவருக்கு 8 வருடம் 8 மாதம் சிறை தண்டனை விதிக்கப்பட்டிருக்கும் தகவலை தினசரிப் பத்திரிகைகள் பிரசுரித்திருந்தன. இவர் மீது சாட்டப்பட்டிருந்த குற்றம் இவர் நிர்வாகத்தை யொட்டிய சில இரகசியங்களை வெளிப்படுத்தினார் என்பது. இவர் 1957 ஆம் ஆண்டு வேறு ஒரு குற்றத்திற்காக 9 வருடம் சிறை தண்டனை அளிக்கப் பெற்று அத்தண்டனையில் பூர்த்தி செய்யாத 5 வருடங்களையும் இப்பொழுது விதிக்கப்பட்டிருக்கும் தண்டனையுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. 14ஆம் தேதி அன்று காலையில் நீதி மன்றத்தில் துவக்கப்பட்ட விசாரணை விரைவில் முடிவு பெற்று தண்டனையும் அறிவிக்கப்பட்டது.

1957 ஆம் ஆண்டு இவர் செய்த குற்றம் யாது? இப்பொழுது இவர் செய்த குற்றம் யாது? என்ற கேள்விகள் எழுகின்றன. 1957 ஆம் ஆண்டு டிஜிலாஸ் 'புதிய வர்க்கம்' என்ற நூலை எழுதி வெளியிட்டார். இந்நூலில் கம்யூனிஸக் கொள்கைகளை எதிர்த்து சில கருத்துக்களை கொண்டிருந்தார். கம்யூனிஸத்திற்கு முரண்பாடாக உள்ள அபிப்பிராயங்களுக்குப் பொறுமை காட்டாத நிர்வாகம் இவரை உடனே கைது செய்து வழக்குத் தொடுத்தது. இப்பொழுது இவர் மற்றொரு நூலை இயற்றியுள்ளார். நூலும் வெளி வரும் சமயம். இந்நூலில் நாட்டு நிர்வாகத்தைக் குறை கூறியோ அல்லது கம்யூனிஸக் கொள்கைகளை எதிர்த்தோ கருத்துகள் ஒன்றும் வெளிப்படவில்லை. இந்நூலின் பெயர், 'ஸ்டாலினுடன் சம்பாஷணை' என்பது. ஒன்பது ஆண்டுகளுக்கு முன்பு இறந்து போன சர்வாதிகாரியுடன் தான்கொண்ட தொடர்பைப் பற்றிய நினைவுக் குறிப்புகள் இந்நூலில் அடங்கியிருக்கின்றன. பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த விவகாரங்கள் இதில் எடுத்து உரைக்கப்பட்டிருக்கின்றன. ஸ்டாலினிஸத்திற்கு எதிரான நிர்வாகத்திற்கு சினம் ஊட்டும் அளவுக்கு இவர் தன் நூலில் சர்வாதிகாரிக்குப் பாராட்டல்கள் அளிக்க வில்லை. ஆனால் சரித்திரத்தில் சர்வாதிகாரிக்குக்கிடைக்கப் பெற்றிருக்கும்முக்கியத்துவத்தையும் இவர் மறுக்கவில்லை. இது இவ்வாறு இருக்க, நிர்வாகம் இவர் பால் சீற்றங் கொண்டு இவருக்கு தண்டனை அளிக்க முன் வந்ததைப் பற்றி அரசியல் அறிஞர்கள் வியப்புறுகிறார்கள். டிஜிலாஸ் அல்பேனியாவிலோ அல்லது சீனாவிலோ இந்நூலை பிரசுரிக்க முன் வரவில்லையே. ஸ்டாலினிஸத்தைஎதிர்க்கும் யூகோஸ்லேவியாவிலா இவ்வாறு நடைபெறுகிறது என்று அவர்கள் கேட்கிறார்கள். இந்நூலில் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த கம்யூனிஸக் கட்சியின் நடவடிக்கைகளை வெளிப்படுத்தியிருப்பது அக்காலத்திய கட்சி இரகசியங்களை அம்பலப்படுத்தியிருப்பதாக நிர்வாகம் இவர் மீது சுமத்தியிருக்கும் குற்றச் சாட்டு. ஆனால் சென்ற பதினைந்து ஆண்டுகளாக நாடு பல துறைகளில் மாறுபட்டிருப்பதையும் அக்காலத்துக் கட்சி இயக்கத்திற்கும், தற்காலத்து அரசியல் நிர்வாகத்திற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாததைப் பற்றி நிர்வாகம் பொருட்படுத்தாதது சிந்திக்க வேண்டியதொரு விஷயம். ஒருக்கால் டிடோவின் நிர்வாகத்தைக் குறை கூறி கருத்துக்கள் ஏதாவது இந் நூலில் இடம் பெற்றிருக்குமோ என்று ஐயம் கொண்டுள்ளோர்க்கு அவ்வாறு ஒன்றுமில்லை என்றும் அறிவிக்கப்படுகிறது. விளாடிமர் டெடிஜர் என்பவர் 1953 ஆம் ஆண்டில் டிடோவின் ஜீவிய சரித்திரத்தை எழுதிப் பிரசுரித்தார். இந் நூலின் பல்லாயிரக் கணக்கான பிரதிகளை வெளி நாடுகள் முழுவதிலும் வாங்கி வாசிக்கப்பட்டன. இந்நூலில் 1948 ஆம் ஆண்டில் யூகோஸ்லோவியாவும், புல்கேரியாவும் சேர்ந்து அப்பொழுது கிரீஸ் தேசத்தில் நிர்வாகத்தை எதிர்த்து நடந்து கொண்டிருந்த உள்நாட்டுக் கிளர்ச்சிக்கு ஆதரவுதர முன் வந்ததாகவும் ஆனால் எங்கு இதை ஒரு காரணமாகக் கொண்டு உலகப் போர் மூளுமோ என்று பயந்து ஸ்டாலின் அதைக் கண்டித்தார் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்நூலைப் படித்தோர்கள் யாவரும் இச்சம்பவத்தை மறக்க முடியாது. ஆயினும் இதைப் பொருட்படுத்தாமல் கிரேக்கிய அரசரும், அரசியும் டிடோவின் அழைப்புக் கிணங்கி யூகோஸ்லேவியாவின் தலைநகரமாகிய பெல்கிரேடிலும், பிரியோனி என்னும் உல்லாசத் தீவிலும் தங்கி களிப்புற்றுச் சென்றார்கள். இதையறிந்திருந்த அமெரிக்கர்களும் யூகோஸ்லேவியாவுக்குப் பொருளுதவியும், இராணுவ உதவியும் வேண்டிய பொழுதுகொடுக்கப்பின் வாங்கவில்லை. தற்காலத்தில் யூகோஸ்லேவியாவிற்கு விரோதம் காட்டும் நாடுகள் மேற்கத்திய நாடுகள் அல்ல. இப்படியிருக்க டிஜிலாஸின் மீது நடவடிக்கை எடுத்துக் கொண்டதற்கு நியாயமான காரணங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. தங்கள் பக்கம் இருந்த ஒரு பழய நண்பன் தங்களை விட்டகன்றதல்லாமல் கருத்து வேற்றுமை காட்டியுள்ளானே என்பது தான் ஒரு சிறந்த காரணமாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது. தனக்குக் கிடைத்த 9 வருட சிறை தண்டனையில் $4\frac{1}{2}$ ஆண்டுகள் சிறையில் கழிந்ததும் எலியனர் ரூஸ்வெல்ட் அம்மையாரின் முயற்சியாலும், பிரிட்டிஷ் தொழிலாளர் கட்சி அங்கத்தினர்களின் முயற்சியாலும் இவருக்கு விடுதலை கிடைத்தது.

டிஜிலாஸ் யூகோஸ்லேவியாவில் ஒரு தலை சிறந்த எழுத்தாளர். அநேக ஆண்டுகளாகப் பாடு பட்டு விவரங்கள் சேகரித்து தேசீயக் கவிஞராகிய நிஜகோஷ் என்பவரைப் பற்றிய ஜீவிய சரித்திரம் ஒன்றை இவர் எழுதியுள்ளார். ஆனால் இதைப் பிரசுரிக்க நாட்டில் ஒருவரும் முன்வர வில்லை என்று தெரியவருகிறது. நிர்வாகத்திற்கு முரண்பாடான கருத்துகளை நூலின் மூலம் வெளியிட்டால் சிறை வாசமும், தூக்கு தண்டனையும், பரிசாகப் பெறலாம் என்று அறிந்தும் அதைப் பொருட்படுத்தாமல் தன் திட நம்பிக்கையை வலியுறுத்தும் இந்நூலாசிரியரின் ஆற்றலை உலகம் பாராட்டுகிறது.

★

# சந்திரமண்டலப் பயணம்

சந்திர மண்டலத்தை அடைவதற்கான முயற்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக ரஷ்யாவினாலும் அமெரிக்காவினாலும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. முதல் மனிதன் சந்திரனில் காலடி எடுத்து வைக்கு முன் சமாளிக்க வேண்டிய பிரச்சினைகள் பல இருக்கின்றன. இவைகளை எப்படி தீர்ப்பது என்பதுபற்றி இப்போது கவனம் செலுத்தப்படுகின்றது.

சந்திர மண்டலத்தை அடைய இவ்வளவு சிரமங்கள் எடுத்துக் கொள்ளப்படுகின்றனவே, அதனால் ஏற்படும் நன்மைகள் என்ன? அவை இக்கட்டுரையில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

சந்திர மண்டலத்தை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் செய்யப்படும் மனித முயற்சிகளில் மூவர் விண் வெளியில் ராக்கெட்டில் பூமியைச் சுற்றி வந்தது, ஒரு அமெரிக்க 'காப்ஸூல்' (ராக்கெட்டின் ஒரு பகுதி) சந்திர மண்டலத்தை தொட்டு மீண்டது, இவைகளெல்லாம் மாபெரும் சாதனைகளாகும். அடுத்தபடியாக பூமிக்கு 4,00,000 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள சந்திரனை எப்படிப் போய்ச் சேருவது என்பது குறித்து கிழக்கு மேற்கு நாடுகள் யோசித்து அதற்கான முயற்சிகளை எடுத்து வருகின்றன. ராக்கெட்மூலம் சந்திரமண்டலம் போய்ச்சேர 60 மணி நேரம் ஆகும்.

டாக்டர் ருடால்ப் குஹென் என்ற பிரபல மூனிச் வான ஆராய்ச்சி நிபுணர் வான வெளிப் பயணம் எல்லா கிரகங்களுக்கும் சாத்தியம் என்று சொல்லமுடியாது என்றாலும் அருகிலுள்ள சந்திர மண்டலம் போய் சேருவது சாத்தியமாகலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார். ரஷ்யர்களும் அமெரிக்கர்களும் இதற்கான முயற்சிகளில் இப்போது தீவிரமாக ஈடுபட்டிருக்கின்றனர்.

சந்திரனுக்குப் போய் திரும்புவதிலுள்ள பிரச்சினைகள் ஒருபுறம் இருக்க சந்திரனில் இறங்கும் போது எப்பேர்பட்ட பிரச்சினைகள் இருக்கும்? அவைகளை எப்படி சமாளிப்பது? இவை பற்றி சிந்திக்கவேண்டியிருக்கிறது. சந்திரனின் மேல் பரப்பில் புழுதி பல அடி கனத்திற்கு படிந்திருக்கிறதென்பது தெரிந்த விஷயம். விண்வெளிப்பயண சாதனம் சந்திர மண்டலத்தில் இறங்குமுன் ஒரு மிகப் பெரிய பிளாஸ்டிக் ஜமக்காளம் எரியப்படும். இது விரிந்து விண்வெளிக் கப்பல் இறங்க வசதியாக அமையும். புழுதி மேல் கிளம்பாமல் இந்த பிளாஸ்டிக் ஜமக்காளம் தடுக்கும்.

இவ்வளவு பிரயாசையுடன் இறங்கிவிட்டால் போதுமா? சந்திர மண்டலத்தில் மனிதன் உயிர் வாழ முடியுமா? என்ற பிரச்சினை இருந்து வருகிறது. சந்திர மண்டலத்தைச் சுற்றி வாயு மண்டலம் பூமியில் இருப்பதுபோல் இல்லாததால் சந்திரனின் பகல் நேரத்தில் உஷ்ணம் 100 டிகிரி ஸெண்டிகிரேட்டாகவும் சந்திரனின் இரவு நேரங்களில் 120 டிகிரி ஸெண்டி கிரேட்டுக்கு குறைந்து உறைந்து போகும் அளவுக்கும் சீதோஷ்ணநிலை மாறுகிறது. இந்த இரவு பகல் வளர்பிறை, தேய்பிறை கணக்கான 14 நாட்கள், சேர்ந்தாற்போல் நீடிக்கிறது ஆகவே சந்திர மண்டலப்பிரயாணிகளுக்கு ஏற்றதான உடைகளைத் தயாரிக்கவேண்டும். கதிரியக்க வீச்சு, விண் வெளித் தூசுகள், விண்கற்கள் இவைகளால் ஆபத்து எதுவும் நேரிடாமல் தடுக்கப்படவேண்டும். இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்காக ஒரு வழியை அமெரிக்கர்கள் கண்டுபிடித்திருக்கின்றனர். சந்திர மண்டலப்புழுதி சேறாகி இறுகிப் போகச் செய்யக் கூடிய ஒரு ரசாயனப் பொருளை இவர்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்தப் பொருளின் உதவி கொண்டு சந்திர மண்டலத்தில் தங்குமிடங்களை கட்ட இவர்கள் திட்டமிட்டுள்ளனர். சந்திர மண்டலத்தில் இறங்குபவர்கள் இங்கு தங்கி இளைப்பாறி பூமிக்கு ரேடியோ செய்திகள் அனுப்பலாம்.

இவ்விஷயம்பற்றி ரஷ்யர்கள் எதுவும் இதுவரை வெளியிடவில்லை. என்றாலும் அவர்களும் இது பற்றி சிந்திக்காமல் சும்மாயில்லை. சந்திர மண்டலத்தில் இறங்க தடையாக இருக்கும் பிரச்சினைகளை எப்படி சமாளிப்பது என்பது குறித்து யோசித்தே வரவேண்டும். ஏனெனில் குறைந்தது இன்னும் இரண்டு வருடங்களுக்குள் அவர்கள் ஒரு மனிதனை சந்திர மண்டலத்தில் இறங்கும்படி செய்யப்போவதாக அறிவித்திருக்கிறார்கள்.

சந்திர மண்டலத்திற்கு மனிதன் போய்வர வசதி ஏற்பட்டு விட்டதென்றே வைத்துக்கொள்வோம். அதனால் ஏற்படக்கூடிய பலன் என்ன? மனிதனுக்கு கிடைக்கும் லாபம் என்ன? முதன் முதலாக பூமியிலுள்ள ரேடியோ, டெலிவிஷன் இவைகளுக்கான டிரான்ஸ்மிட்டர்களை சந்திரமண்டலத்தில் ஏற்படுத்தலாம். சந்திரன் பூமிக்கான வான ஆராய்ச்சி மேற்பார்வை ஸ்தலமாக விளங்கும். பூமியின் கால நிலைகளை மிகவும் சரியான முறையில் முன்கூட்டியே திட்டமாக அறிவிக்கமுடியும். சந்திர மண்டலத்திலிருந்து இதர கோள்களுக்கு செல்வதற்கான முயற்சிகளையும் மேற்கொள்ள முடியும்.

சந்திர மண்டலத்தில் கிடைக்கும் தாதுப்பொருள்கள் பெரும் அளவுக்கு பயன்படுத்தும் வாய்ப்பு ஏற்படலாம். மனிதன் வசதியாக சந்திரனில் இறங்கிவிட முடியும் என்று ஏற்பட்டபின் சந்திரனில் சுரங்கங்கள், தொழிற்சாலைகள் ஏற்படலாம் என்பதை மறுக்க முடியாது.



## சிலந்தியின் இல்லறம்

சிலந்திகளின் நுகரும் திறன், மிக மேம்பட்டு விளங்குகிறது. இரை தேடுவதற்கு, மோப்பத் தன்மையையும் சிலந்திகள் பயன்படுத்துகின்றன. ஒவ்வொரு விலங்கிற்கும், ஒருவகை மணமுண்டு. அந்த மணத்தை நுகர்ந்துதான் ஏனைய விலங்குகள் ஒரு விலங்கின் இருப்பிடத்தையும், அவ்விலங்கு சென்ற தடத்தையும் அறிந்து அதற்கேற்ப ஒழுகுகின்றன. பெண் சிலந்தியைக்கண்ட ஆண்கள் ஆனந்த நர்த்தனம் புரியும். பெண் சிலந்திகளின் மனத்தை நுகர்ந்தவுடனேயே ஆண் சிலந்திகள் வெறியேறி ஆட ஆரம்பிக்கும். ஆண் சிலந்தியின் திறனை, அளவிட எண்ணிய ஒருவர், ஒரு கூட்டினுள் ஒரு பெண் சிலந்தியைச் சிறிது நேரம் வைத்திருந்து, பின்னர் அதனை வெளியில் எடுத்து விட்டுவிட்டு ஒரு ஆண் சிலந்தியை அக்கூட்டினுள் விட்டார். பெண் சிலந்தி விட்டுச்சென்ற மணத்தை நுகர்ந்த ஆண் சிலந்தி, பெண் சிலந்தி இருப்பதாக எண்ணிக் கொண்டு களிநடனம் புரிய ஆரம்பித்தது.

எந்த விதமான பதிலும் காதலியிடமிருந்து வராததால் துணுக்குற்ற ஆண் சிலந்தி ஆட்டத்தை நிறுத்திவிட்டு, பெண் சிலந்தியைத் தேட ஆரம்பித்து ஏமாற்றமடைந்து திரும்பியது.

ஒரு பெண் சிலந்தியை மணக்க விரும்பும் ஆண் சிலந்தி, காதலிக்குப் பிடித்தமான உணவுப் பொருள்களைத் தூக்கிவந்து அதன் முன்னால் சமர்ப்பிக்கும். பெண் சிலந்தி, அரைப் பார்வை பார்த்த பிறகு வெறுப்புடன் அவ்வுணவுப் பொருள்களை உண்ண ஆரம்பிக்கும். உடன் மகிழ்ச்சிப் பிரவாகம் எடுத்த ஆண் சிலந்தி நடனம்புரிய ஆரம்பிக்கும். பெண் சிலந்தி, அந்த நாட்டியத்தைக் கண்டும் காணாதது போல் சில விநாடியிருக்கும். வெகு நேரமாக ஆடிக் கொண்டிருக்கும் தலைமகனைக் கண்ணுற்ற தலைமகள் பின் தானும் மெதுவாகச் சேர்ந்து ஆடுவாள். இவ்வாறு சில விநாடிகள் காதலர்கள் ஆடிக் களைத்த பின்னர் கூடிக் களிப்பர். கூடல் முடிந்தவுடன் ஆண் சிலந்தி பெண் சிலந்திக்கு பயந்து ஓடும். ஏனெனில் கோபமுற்ற பெண் சிலந்தி, கணவனை கொன்றுவிட்டு கைம்பெண்ணாக வாழும்! உயிருக்குப் பயந்த ஆண் சிலந்தி கூடிக் களித்தபின் ஓடி மறைந்துவிடும்.



நமது நாட்டு

# ரொட்டிகள்

பிஸ்கட்டுகள் சொகுசான வாழ்க்கையின் சின்னமாக இருந்த காலம் மறைந்து போய் பாமரரும் உட்கொள்ளும் உணவுப் பண்டமாக இப்போது மாறி வருகிறது. வடக்கே இமயம் முதல் தெற்கே குமரி வரை, 'ரொட்டிக் கடை' இல்லாத கிராமமே கிடையாது; பிஸ்கட் பொட்டலம் விற்காத கடையே கிடையாது. இந்தக் கடைகளில் விற்கும் அத்தனை பிஸ்கட்டுக்களும் இந்தியாவிலேயே செய்யப்பட்டவை என்பதை நினைக்கும்போது நம் உடம்பு உண்மையிலேயே பூரிப்படைகிறது.

நம்முடைய உபயோகத்துக்குத் தேவைப்படுகிற பிஸ்கட்டுகள், மிட்டாய்கள் அனைத்தையும் இப்போது இங்கேயே தயாரித்துக் கொள்கிறோம். வெளி நாடுகளிலிருந்து பிஸ்கட்டுகளும், மிட்டாய்களும் இறக்குமதி செய்வது பல ஆண்டுகளுக்கு முன்னமேயே முற்றிலும் நிறுத்தப்பட்டு விட்டது.

பொதுவாக மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்துவருவது காரணமாகவும் நகர வாழ்க்கையில் மக்கள் அதிக நாட்டம் கொண்டு வருவது காரணமாகவும், சமீப காலமாக, இப்பண்டங்களின் தேவை படிப்படியாக அதிகரித்துக்கொண்டே வருகிறது.

இந்நாட்டில் தற்போது மொத்தம் 40 பெரிய பிஸ்கட் தொழிற்சாலைகள் உள்ளன. இவற்றில் ஆண்டுதோறும் மொத்தம் சுமார் 30,000 டன் பிஸ்கட்டுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்த பிஸ்கட்டுகள், வெளிநாடுகளில் தயாரிக்கப்படும் பிஸ்கட்டுகளுக்கு இணையாகக் கூறக்கூடிய அளவுக்கு உயர்தரமாக உள்ளன. நாம் தயாரிக்கும் பிஸ்கட்டுகளை, வெளிநாடுகளும் விரும்பி வாங்கிக்கொள்கின்றன. 1956ம் ஆண்டில் சுமார் ஐந்து டன் பிஸ்கட்டுகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டது; 1960ல் இது 86 டன்னுக்கு உயர்ந்தது.

மூன்றாவது திட்ட கால முடிவில், பெரிய தொழிற்சாலைகளின் பிஸ்கட்டுகள் உற்பத்தி ஆண்டுக்கு 40,000 டன் அளவை எட்டிவிடும் என்றும் சுமார் 1000 டன் ஏற்றுமதியாகுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

சுமார் 44 பெரிய தொழிற்சாலைகள் மிட்டாய்களை உற்பத்தி செய்து வருகின்றன. இவற்றில் ஆண்டுதோறும் சுமார் 50,000 டன் மிட்டாய்கள் உற்பத்தி செய்ய முடியும்; ஆனால், சுமார் 17,000டன்களே இப்போது உற்பத்தி செய்யப்படுகிறது. இந்தத் தொழிலிலுங்கூட எண்ணற்ற சிறு உற்பத்திப் பிரிவுகள் உள்ளன; இவற்றின் உற்பத்தி இதுவரை கணக்கிடப்படவில்லை.

பிஸ்கட்டுகளும் மிட்டாய்களும் தயாரிப்பதற்கு சர்க்கரை ஏராளமாகத் தேவைப்படுகிறது. உள்நாட்டில் சர்க்கரை தேவையுள்ள அளவு கிடைக்கிற தென்றாலும், உலக மார்க்கெட் விலையை விட மிக அதிகமாக இருப்பதால், ஏற்றுமதி வர்த்தகத்தை இது பாதிப்பதாக இருக்கிறது; எனவே, ஏற்றுமதிக்காக உற்பத்தி செய்கிற தொழிற்சாலைகளுக்காவது, சர்க்கரை குறைந்த விலையில் கிடைப்பதாக இருந்தால் பெரிதும் உதவியாக இருக்கும் என்று கருதப்படுகிறது. உயர்தரமான மாவு, பதம் செய்யப்பட்ட பால், பால் பவுடர், குளூகோஸ் தண்ணீர், உணவு உபயோக எண்ணெய்கள், எசென்சுகள் ஆகியவை போன்ற பிறவகை மூலப்பொருள்கள் எல்லாம் உள்நாட்டிலேயேகிடைக்கின்றன. மேலே சுற்றுவதற்கு உபயோகிக்கும் காகிதம், அச்சடிப்பதற்கான செலோபேன் காகிதம், மெழுகுத்தாள் ஆகியவை இன்னமும் வெளிநாடுகளிலிருந்தே இறக்குமதி செய்யப்பட்டு வருகின்றன. மூன்றாவது திட்ட கால முடிவுக்குள், அவ்வகைக் காகிதங்களின் உள்நாட்டு உற்பத்தி கணிசமாக அதிகரித்து, வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வது அறவே நின்றுவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ⁂




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 27 | 27—5—1962 | வாரம் 28

# தமிழ் எழுத்தாளர்

இந்திய நாட்டின் பற்பல பகுதிகளிலும் வாழ்ந்து கொண்டு தமிழ்ப் பணிபுரியும் எழுத்தாளர்களின் கூட்டு இயக்கமான அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்ப் பெருமன்றத்தின் முதலாவது மாநாடு சென்னையில் சிறப்பாக நடைபெற்றிருக்கிறது. மொழியால் வேறுபட்டாலும்கலாசாரத்தாலும், பண்பாட்டாலும்ஒன்றுபட்ட மக்களே இந்தியர் என்ற உண்மையை இந்த மாநாடு வற்புறுத்தியிருக்கிறது. எழுத்துரிமைப் பாதுகாப்புக்கு 25 ஆயிரம் கொண்ட நிதி எழுப்பும் முயற்சியை இந்த மாநாடு ஆதரித்திருக்கிறது. பாரத நாட்டில் இன்று பதினான்கு மொழிகள் ஆட்சி மொழி அந்தஸ்தைப் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்றான தமிழ் தனக்குரிய சிறப்பைப் பெற்று உயர வேண்டும். பெருமன்றம் தமிழ் இலக்கிய மறு மலர்ச்சிக்கும் எழுத்தாளர் நல் வாழ்வுக்கும் அயராது பணிபுரியும் ஒரு உயர் இயக்கமாக விளங்க வேண்டுமென்றும் தமிழ் எழுத்தாளர் இந்த இயக்கத்தை வலுப்படுத்த வேண்டுமென்றும் விரும்புகிறோம்.

## மாநாட்டு நிகழ்ச்சிகள்

அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர் பெருமன்றத்தின் ஆதரவில் மே 19, 20 தேதிகளில் சென்னையில் முதலாவது இலக்கிய மாநாடு மிகச் சிறப்புற நடந்தது. 19ம் தேதியன்று பெருமன்றத் தலைவர் பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள் தலைமையில் பாரதப் பேரரசின் பண்பாட்டுத் துறை அமைச்சர் பேராசிரியர் ஹுமாயூன் கபீர் அவர்கள் மாநாட்டைத் துவக்கி வைத்தார்.

20 ம் தேதியன்று காலை முன்னாள் தலைமை நீதிபதி டாக்டர் பி. வி. ராஜமன்னார் அவர்கள் தலைமையில் 'பிற மொழிகளில் தமிழ்' என்பது குறித்து கன்னடம், மலையாளம், தெலுங்கு, உருது, இந்தி ஆகியவை பற்றி முறையே மாஸ்தி வெங்கடேச ஐயங்கார், டாக்டர் எஸ். கே. நாயர், ச. ராதா கிருஷ்ண சர்மா, ஹைதர் அலிகான், ஆக்கூர் அனந்தாச்சாரி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

பிற்பகல் திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கவியரங்கில் திருவாளர்கள் சே. ர. குமாரசாமி, குயிலன், கொத்தமங்கலம் சுப்பு, என். எஸ். சிதம்பரம், சிதம்பர ரகுநாதன், புத்தனேரி ரா. சுப்பிரமணியம், தமிழழகன், திருலோகசீதாராம், நாகமுத்தையா, மா. வரதராஜன் ஆகியோர் பங்கு கொண்டனர்.

மாலை நடைபெற்ற 'எழுத்தாளர்-பல கோணங்களில்' என்ற நிகழ்ச்சியில் ரசிகர், விமர்சகர், பத்திரிகாசிரியர், பதிப்பாளர், அச்சகத்தார், திரைப்பட இயக்குநர் ஆகியோர் பற்றி முறையே திருவாளர்கள் அ. ச. ஞானசம்பந்தன், கு. அழகிரிசாமி, கி. வா. ஜகந்நாதன், சின்ன அண்ணாமலை, ரா. ஸ்ரீ. ஸ்ரீகண்டன், ஏ. பி. நாகராஜன் ஆகியோர் எழுத்தாளர்பற்றிய கருத்துரைகளைக் கூறினர்.

•

# கண்ணோட்டம்

— ரா. நா.

சுதந்திரா கட்சியை ஆதரிக்கும் சஞ்சிகை ஒன்றில் ஒரு கேலி சித்திரம் வெளியாகியிருக்கிறது. சென்ற பத்து ஆண்டுகளாக ராஷ்டிரபதி பதவி என்கிற கூண்டில் பாபு ராஜேந்திரபிரசாதை பிரதமர் நேரு அடைத்துவைத்திருந்தது போலவும், இப்போது அவரைவிடுவித்து விட்டு டாக்டர் ராதா கிருஷ்ணனை அந்த கூண்டில் அடைக்கிறது போலவும் இந்த சித்திரம் தீட்டப்பட்டிருக்கிறது.

இதன் மூலம் நமது அரசியலமைப்பு, நமது பிரதமர், மாஜி ராஷ்டிரபதி, தற்போதைய ராஷ்டிரபதி யாவற்றையும் ஒரே மூச்சில் அப்பத்திரிகை நிந்திக்கிறது என்பதை ஆசிரியர் உணர்ந்ததாகத் தெரியவில்லை. நமது அரசியலமைப்பில் ராஷ்டிரபதி பதவிக்குச் சில சிறப்பான பொறுப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. அந்தப் பொறுப்புகளை நிறைவேற்றுபவரை அடிமை என்று கூறுவது நியாயமா? நீதிபதி பதவி வகிக்கையில் நீதிபதிகள் அரசியலில் தலையிடலாகாது. அரசாங்க அதிபராயிருப்பவர் கட்சித் தொடர்பு கொள்ளக் கூடாது. மந்திரி சபையின் யோசனைப்படி தலைவர் தம் அதிகாரத்தைச் செலுத்த வேண்டும். இவையெல்லாம் ஜனநாயக ஆட்சி சீராக நடப்பதற்கான சம்பிரதாயங்கள், இந்த சம்பிரதாயங்கள்தான் நிலையான ஆட்சியின் ஜீவன் என்றுகூறலாம். பாபு ராஜேந்திரர் பதவி காலத்தில் மண் பொம்மை மாதிரி இருந்து விடவில்லை. ஹிந்து சட்ட சீர்திருத்த மசோதா வந்த பொழுது இவ்விஷயத்தில் சற்று நிதானமாயிருக்க வேண்டும் என்று மந்திரிசபைக்கு யோசனை கூறினார். வாரா வாரம் ஜனாதிபதியும், பிரதமரும் கூடிப் பேசி அவ்வப்போது எழும் பிரச்னைகளை விவாதித்து இருவரும் பயன்பெற்றனர் என பிரபல ஆங்கில தினசரியில், விஷயமறிந்த நிருபர் எழுதியுள்ளார்.

மாதம் 10,000 ரூபாய் சம்பளத்திற்காக பாபு ராஜேந்திரரும் டாக்டர் ராதாகிருஷ்ணனும் அடிமைகளாக இருக்க இசைந்தனர் என்று நினைப்பது பெருந்தவறு, நமது அரசியல் தலைவர்கள் நன்கு யோசித்துப் பிரிட்டிஷ் அரசியல் சம்பிரதாயத்தை ஒட்டி நமது ராஷ்டிரபதியின் உரிமைகளையும் பொறுப்புகளையும் நிர்ணயித்தார்கள். வேண்டுமென்றேதான் அமெரிக்க முறையை அவர்கள் அனுஷ்டிக்கவில்லை. அயல் நாடுகளுக்கு உதவி செய்யும் அமெரிக்க ஜனாதிபதியின் திட்டத்தை செனட் கமிட்டி மாற்றியதால் அமெரிக்க அரசியலில் ஏற்படும் ராசாபாசங்களைத் தவிர்க்கவே நமது அரசியல் விற்பன்னர்கள் பிரிட்டிஷ் சம்பிரதாயத்தை ஏற்றுக் கொண்டனர். நமது ஆட்சித் தலைவரை கண்யமாகவும், மதிப்புடனும் நாம் கௌரவித்து நடத்த வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் நமது அரசியல் சட்டம் பிரிட்டிஷ் பாணியில் அதிபரின் அதிகாரங்களை நிர்ணயித்து. பத

வியிலிருந்து விலகிய நமது ராஜேந்திர பாபுவை எப்படி லட்சோபலட்சம் மக்கள் வாழ்த்தி வழியனுப்பினர் என்பதையும் மறந்து ஒரு பத்திரிகை இவ்வளவு கேவலமான சித்திரத்தை வெளியிட்டது வருந்தத்தக்கது.

ஃ ஃ ஃ

அமெரிக்க அணுகுண்டு சோதனை நடக்கும் இடத்திற்கு ஒரு யுத்தக் கப்பலை அனுப்பி வைக்கவேண்டும் என பிரிட்டிஷ் தத்துவ ஞானி ரஸ்ஸெல் நேருவுக்கு எழுதியபடி நடக்கவேண்டும் என திரு. ராஜகோபாலாசாரியார் நம் பிரதமருக்கு எழுதிய கடிதமும் பின்னர் இவ் விருவர்களுக்கிடையே நடந்த கடி தப் போக்குவரத்தும் வெளியாகி விட்டது. இது பற்றிப் பல நிருபர்கள் திரு. கே. சந்தானம் உள்பட தத்தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். தனிப்பட்டவர்கள் சத்தியாகிரக இயக்கத்தை ஆதரிப்பது போல் அரசாங்கங்கள் செய்யமுடியாது, செய்யவும் கூடாது என்று ஒரு முகமாகக் கூறியுள்ளனர். அணுகுண்டு வெடிப்பதை யார் செய்தாலும் அது தவறு என்றுநமது பிரதமர் தெளிவாகக் கூறியுள்ளார். திரு. ஆச்சாரியாரின் யோசனையை ஏற்றுக் கொள்ள இயலாததற்கு நேரு தக்க காரணங்கள் கூறியுள்ளார். எவ்வளவோ சர்வதேச சங்கடங்களை இந்தியா சமாளிக்க வேண்டிய இந்த சந்தர்ப்பத்தில் தர்ம சங்கடமான நிலைமைக்கு நம் நாட்டை உள்ளாக்காமலிருப்பது அறிவுள்ள இந்தியர்கள் கடமையாகும்.

ஃ ஃ ஃ

ஒண்ட வந்த பிடாரிஊர்ப் பிடாரியைத் துரத்துவது போலிருக்கிறது டில்லியிலுள்ள சீன தூதராலயத்தாரின் செயல். நம் நாட்டு சட்டதிட்டங்களை மதிக்காமல் 'இன்றைய சீனு' எதும் தங்கள் பத்திரிகை மூலம் இந்தியாவிலேயே இந்தியாவை அவமதித்துச் செய்திகள் வெளியிட்டு வருகின்றனர். அந்தப் பத்திரிகையின் குறிப்பிட்ட இதழ் வெளியாகி வினியோகிக்கப்பட்ட பிறகு நமது அரசாங்கம் பத்திரிகையின் அந்த இதழைப் பறிமுதல் செய்துள்ளது. காலந்தாழ்த்தி செயல் பட்டதற்காக அரசாங்கத்தை எதிர்க் கட்சியினர் வன்மையாகக் கண்டித்துள்ளனர். நம் நாட்டிலுள்ள எதிரிகளின் நடமாட்டத்தையும் தீச்செயல்களையும் அரசாங்கம் விழிப்புடனிருந்து முளையிலேயே கிள்ளிவிட வேண்டும். விஷத்தை வளரவிடலாகாது.

ஃ ஃ ஃ

சட்ட சபைகளில் வாய் திறவாமல் இருந்து விட்டு வருபவர்கள் நாட்டுக்கு நல்ல பணி புரிகின்றனர் என்று கொள்ள வேண்டும். ஏனெனில் உளறிக் கொட்டி ஊறு விளைவிப்பவர்களைவிட வாய் மூடி மௌனிகள் சாலச்சிறந்தவர்களல்லவா? சமீபத்தில் பாராளுமன்றத்தில் நிகழ்ந்த சம்பவம் ஒன்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம். ஜாகண்ட் கட்சித் தலைவர் அரசாங்கத்திற்கு எதிராக எதோ ஒரு தஸ்தாவேஜிலிருந்து எதையோ படித்தார். அது என்ன தஸ்தாவேஜி என்ற கேள்வி எழுந்தது. கனரகத் தொழில் நிலவரம் பற்றிபார்லிமெண்டார் இலாகா மந்திரி திரு. சத்திய நாராயண சின்ஹா வினியோகித்த குறிப்பு என்று பதிலளித்தார். திரு. சின்ஹா அப்படிப்பட்ட குறிப்பு ஒன்றையும் தாம்வெளியிடவில்லை என்று மறுத்தார். விஷயத்தைத் துருவிப்பார்த்ததில் அகில இந்திய வர்த்தக சம்மேளனத்தினரால் வெளியிடப்பட்ட ஒரு பிரசுரத்திலிருந்து அவர் படித்தார் என்பதுவெளியாயிற்று. தாம் என்ன பேசுகிறோம் என்பதை அறியாமல் ஒரு எதிர்க்கட்சித் தலைவர் பேசுகிறார் என்றால் உருப்படியான விவாதம் எப்படி நடக்கும் என்பதை சட்ட சபை உறுப்பினர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

ஃ ஃ ஃ

சென்னை அரசாங்கசெய்தி இலாகா மந்திரி திரு. பூவராகனுக்கு அதிசயமான அனுபவம் ஏற்பட்டது. கோவை மாவட்டத்தில் சில இடங்களுக்கு முன் அறிவிப்பின்றி மந்திரி சென்றார். சென்ற இடங்களில் முக்கியமான அதிகாரிகள் அலுவலகத்தில் இல்லை. ஒரு இடத்தில் அந்த அலுவலகமே வேறு இடத்திற்கு மாற்றப்பட்டிருப்பதாக நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்ததாம். பொதுமக்களுக்குச் சேவை செய்ய வேண்டிய அதிகாரிகள் இப்படி பொறுப்பற்று இருந்தால் மக்கள் நலன் எப்படிப் பாதுகாக்கப்படும். புதிய மந்திரிசபையில் அதுவும் புதுமந்திரிகள்மிகவிழிப்புடன் வேலை செய்வது பாராட்டத்தக்கது. அன்று ஸ்தல ஸ்தாபன மந்திரி திரு. மஜித் சென்னை கொத்தவால் சாவடிக்கு திடீர் விஜயம் செய்ததன் மூலம் அந்தக் கரிகாய்ச்சந்தைக்கு விடிவு ஏற்படும் போலிருக்கிறது. திரு. பூவராகனின் அனுபவத்தின் விளைவாக அரசாங்க அதிகாரிகள், ஊழியர்கள் பொறுப்புணர்ச்சியுடன் பணியாற்றத் தொடங்குவார்களானால் தமிழ்மக்கள் பயன் பெறுவார்கள். ✱

# வாழ்க மணமக்கள்



செல்வி: பத்மாவதி. செல்வன்: B.S. வெங்கிடாசலம் B.A.,

சென்னை திருவல்லிக்கேணி பிரபல ஜோதிடர் திரு. T. A. ராமச்சந்திரய்யர் குமாரி பத்மாவதிக்கும், அன்னி குடி மிராசுதார் திரு. சிவராமகிருஷ்ணய்யர் குமாரன் வெங்கிடாசலத்திற்கும் அண்மையில் மிக்க சிறப்புடன் திருமணம் நடந்தேறியது.

## டெலிபோன் கட்டண மாறுதல்

ஜுன் மாதம் 1-ந் தேதி முதல் வெளியூர்களுக்கு பேசும் 'டெலிபோன்' கட்டணத்தில் மாறுதல் செய்யப்பட்டு இருக்கிறது என டெல்லி சட்ட சபையில் அமைச்சர் தெரிவித்துள்ளார். இதன்படி காலை 8 மணி முதல் இரவு 7 மணி வரை பேசும் நேரத்திற்கு முழுக் கட்டணமும் மீதி நேரத்திற்கு பாதிக்கட்டணமும் வசூலிக்கப்படும். ✱

# விவசாயிகளுக்கு...

நாட்டின் உணவு உற்பத்தி விரைவில் பெருகி நாடு உணவுத் துறையில் தன்னிறைவு பெற தீவிர விவசாயத்திட்டம் என்று ஒரு திட்டம் நடத்தப் பட்டு வருகிறது. தற்சமயம் ஏழு மாநிலங்களில் பொறுக்கி எடுக்கப்பட்ட ஏழு மாவட்டங்களில் இத்திட்டம் நடந்து வருகிறது.

தமிழ் நாட்டில் 1960ம் ஆண்டு ஏப்ரல் மாதம் தஞ்சை மாவட்டத்தில் இத்திட்டம் துவக்கப்பட்டது. தஞ்சை மாவட்டத்தில் சாதாரணமாக ஏக்கர் ஒன்றுக்கு சராசரி 1320 ராத்தல்கள் காணும். தீவிர விவசாயத் திட்டத்தின் மூலம் இந்த விளைச்சலை 1650 ராத்தல்களுக்கு உயர்த்த முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

தீவிர விவசாயத் திட்டத்தின் முக்கிய அம்சம் என்னவென்றால் நல்ல உற்பத்திக்கு இன்றியமையாத எல்லா வசதிகளையும் ஒரே சமயத்தில் விவசாயிக்கு கிடைக்கும்படி செய்வது என்பது தான். இதுவரை நம்நாட்டில் மகசூல் மிகவும் குறைவாக இருந்து வந்ததற்கு காரணங்கள் பல. அவைகளில் ஒன்று என்னவெனில் நல்ல விதை கிடைத்தால் போதுமான உரம் உரிய காலத்தில் கிடைப்பதில்லை. இரண்டும் கிடைத்தால் பூச்சி மருந்துகள் கிடைப்பதில்லை, அல்லது நவீன விவசாயக் கருவிகள் கிடைப்பதில்லை. இந்த நிலையை ஒழித்து விவசாயிக்கு தேவையான சகல விவசாயப் பொருள்களையும் உரிய அளவில் உரிய காலத்தில் கொடுக்க இந்த திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.

தஞ்சை மாவட்டத்தில் நெல் சாகுபடியாகும் பரப்பு பதினைந்து லட்சம் ஏக்கர்கள். இதில் முதல் ஆண்டு 3½ லட்சம் ஏக்கர்கள் இந்த திட்டப்படி சாகுபடிக்கு கொண்டுவரப்பட்டுள்ளன.

1200 டன்கள் அபிவிருத்தி செய்யப்பட்ட விதைகளும், 4500 டன் ரசாயன உரங்களும், 6000 விவசாயக் கருவிகளும் விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன. 53,000 விவசாயிகளுக்குத் தனித்தனியான பண்ணை உற்பத்தி திட்டங்கள் வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புதிய சாகுபடி முறைகளை எவ்வாறு பின்பற்றுவது என்று வழிகாட்ட 1800 செய்முறை நிருபணங்கள் மாவட்டத்தில் பல இடங்களில் நிகழ்த்தப்பட்டன. இவைகளினால் விவசாயிகளுக்குப் புதிய முறைகளில் உள்ள நற்பலன்கள் நன்கு தெளிவாகியுள்ளன. மேலும் 54 லட்சம் ரூபாய் வரை குறுகியகால கடன் வசதிகள் அளிக்கப்பட்டும் இருக்கின்றன.

தீவிர விவசாயத் திட்டம் பின்பற்றப்பட்டு வரும் எல்லா இடங்களிலும் நவீன முறைகள் பின்பற்றப்படுவதன் காரணமாக மகசூலில் கணிசமான உயர்வு உறுதியாக எதிர்பார்க்கப்படுகிறது.



பயிர்களை பூச்சிகளும் நோய்களும் தாக்காமல் பாதுகாக்க மருந்து அடிக்கப்படுகிறது.



# மனிதனின் மூளை

மனிதனின் மூளை எப்படி இயங்குகிறது? மனோதத்துவ சாஸ்திரத்தின் உண்மை என்ன? மனித மூளைக்கு ஏற்படக்கூடிய வியாதிகள் எவை? அவைகளை எப்படி குணப்படுத்துவது? இவை பற்றி பல நாடுகளைச் சேர்ந்த நிபுணர்கள் கொண்ட கோஷ்டி மூனிச் நகரில் ஆராய்ச்சிகள் செய்து வருகின்றன. 'எலெக்டிரான் மைக்கிராஸ்கோப்' மூலம் மூளையிலுள்ள தசை நாளங்களைப் பரிசோதித்து மூளை சம்பந்தமான வியாதிகள் பற்றி பரிசீலிக்கப்படுகின்றது. புற்றுநோய், வலிப்பு ஏற்படும் நரம்பு வியாதி, இதர தொத்து வியாதிகள் இவைகள் இருந்தாலும், மன அதிர்ச்சி காரணமாக ஏற்படக்கூடிய நிலைமையையும் இக்கருவி வெளிப்படுத்துகிறதாம். இந்நிபுணர்கள் தங்கள் ஆராய்ச்சியின் தாரதம்மியத்தை அறிய தி— ஆரோக்கியமானவர்களையும் ஆராய்ச்சி செய்து வருகின்றனர்.

மூளையில் ஏற்படும் அதிர்ச்சியை அளவிடவும், பதிவு செய்யவும் ஒரு மின்சார கார்டியோ கிராப் (மூளைப்பதிவு) என்ற கருவி உபயோகிக்கப்பட்டு ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. மூளை சேதமடைந்துள்ள நோயாளிகளை எவ்வளவு துரிதமாக குணப்படுத்த முடியும் என்பது இந்த ஆராய்ச்சிகளின் மூலம் கண்டுபிடிக்கப்பட்டது. இப்பேர்ப்பட்ட ஆராய்ச்சி மூலம் மூளையின் எந்தப்பகுதி பாதிக்கப்பட்டிருக்கிறது என்பது கண்டுபிடிக்கப்பட்டு சிகிச்சை செய்ய முடிகிறது.

மருந்துகளைக் கொடுத்து மூளை வியாதிகளை எப்படி குணப்படுத்தலாம் என்பது பற்றிய பரீட்சைகள் குரங்குகளிடம் நடத்தப்பட்டு வருகின்றன. இப்பிராணிகளுக்கு லாகிரி வஸ்துக்கள் கொடுக்கப்பட்டு போதை ஏற்றியபின் மருந்துகளைக் கொடுத்து சிகிச்சை செய்யப்படுகின்றன. இப்பரீட்சைகள் மூலம் குடிபோதையில் மூழ்கிய நோயாளியையும் விஷம் அருந்திய நோயாளியையும் குணப்படுத்துவதற்கான முறைகளும் மருந்துகளும் கண்டுபிடிப்பது சாத்தியமாகும். மனோதத்துவ நிபுணர்களுக்காகவே ஒரு தனி துறை ஏற்படுத்தப்பட்டுள்ளது. நாகரிக வாழ்க்கையினாலும், கெடுபிடி நிலைமையிலும் தொடர்ந்து நினைக்க முடியாதபடியும் செயலுக்கும் நினைவுக்கும் சம்பந்தமில்லாதபடியும் ஏற்படும் 'ஸ்கிஸோப்ரேனியா' என்ற வியாதியை குணப்படுத்துவது குறித்து புது முறைகள் கண்டுபிடிப்பதில் இத்துறை பெரிதும் உதவும்.



# ஹோமியோ மகாநாடு

அகில இந்திய ஹோமியோபதி மாநாடு, இந்தியன் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்டின் பழைய மாணவர்கள் சார்பில் குடந்தையில், மகாராஷ்டிர ராஜ்ய சந்திரபுரி ஹோமியோபதி கல்லூரி முதல்வர் டாக்டர் திரு திலீப் சிங் தலைமையில் மே 13ம் தேதி நடைபெற்றது.

டாக்டர் திரு. வி. ஆர். மூர்த்தி தமது வரவேற்புரையில் விலை மலிவான ஹோமியோபதி வைத்திய முறை ஏழைகளுக்கும் கிராமத்தாருக்கும் உதவியாக இருக்கும் என்றும் இந்தியாவில் சுமார் 50 லட்சம் ஹோமியோபதியர்கள் இருப்பதாகவும் தங்கள் ஸ்தாபனமே இதுவரை 2400 பேருக்கு பயிற்சி அளித்துள்ளது எனவும் இவ்வைத்திய முறை இயன்றவரை கிராம வைத்திய தேவையை தீர்த்து வருவதால் அரசினர் இம்முறைக்கு ஆதரவும் உத்ஸாகமும் அளிக்க வேண்டுமென்பதுடன் ஹோமியோபதி கல்லூரி அமைக்கவேண்டிய அவசியத்தை எடுத்துக்கூறினார்.

தலைவர் திரு. திலீப்சிங் பேசுகையில் 'ஹோமியோபதிக்கும், அல்லோபதிக்கும், மற்ற வைத்தியத்திற்கும் வித்தியாசம் இருப்பதால் ஹோமியோபதிமுறையை மற்ற முறைகளில் கலக்காமல் தனித்து அபிவிருத்தி செய்ய வேண்டும். சில ராஜ்யங்களில் மேல் படிப்பில் மாத்திரம் ஹோமியோபதி முறைகள் கற்பிக்கப்படுகிறது பலனளிக்காது. ஹோமியோபதி முறையை ஒரே சீராக்கவேண்டும். ஒவ்வொரு ராஜ்யத்திலும் ஒரு ஹோமியோபதிகல்லூரியை மத்திய சர்க்கார் அமைக்க வேண்டும். அனைத்திந்திய ஹோமியோபதி கவுன்சில் ஒன்று அமைக்கச் செய்ய மத்திய அரசினரிடம் ஒரு தூதுக் குழுவை அனுப்ப வேண்டும்' என்றார்.

அமைச்சர் திருமதி ஜோதி அம்மாள் ஹோமியோபதி மகாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசுகையில் தமிழ் நாடு அரசு சட்ட இலாகா ஹோமியோபதி முறை பற்றிய மசோதா ஒன்றை பரிசீலனை செய்து வருகிறது. தனியார் துறையில் ஹோமியோபதி கல்லூரி அமைக்கப்பட்டால் அரசினர் உரிய உதவி செய்வார்கள். டாக்டர் திரு. வி. ஆர். மூர்த்தியின் ஊக்கமும் முயற்சியும் பாராட்டுக்குரியது. அவர் தமது அனுபவம், முன்னின்று செயலாற்றும் திறன் இரண்டையும் பிணைத்து உருவாக்கி ஒரு ஹோமியோபதி கல்லூரி ஏற்படுத்தலாம்.

தவிர போலி ஹோமியோபதி டிப்ளமாக்களை ஒழிக்க ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். ஹோமியோபதியின் எதிர்காலத்தில் சிரத்தை உள்ளவர்களின் ஒத்துழைப்புடன் இப்பிரச்னையை சாமர்த்தியமாக சமாளிக்கவேண்டும். தமிழ் நாடு அரசினருக்கும் ஹோமியோபதி வைத்திய முறை ஆலோசகர் ஒருவரை நியமித்துக்கொள்வது பற்றி பரிசீலனை செய்யும்' என்றார்.

ஹோமியோபதி வைத்திய முறையின் மூலவரான டாக்டர் திரு. சாமுவேல் ஹானிமன் படத்தை கல்கத்தா டாக்டர் திரு. சுகுமாரராயும், மகாத்மா காந்தி படத்தை கல்லுப்பட்டி சாந்தி ஆசிரமம் திரு. ஆர். குருசாமியும் திறந்து வைத்தனர்.

★

# தெரிந்துகொள்வீர்

## மனிதரும் மரமும் இல்லாத தீவு

கேரளக் கரையை அடுத்த லட்சத் தீவு; மனிதர்களோ மரங்களோ யில்லாமல் பறவைகள் மாத்திரம் வாழும் அதிசயத் தீவு, இதை பறவைகள் தீவு என்றும் பிட்டித் தீவு என்றும் கூறுகின்றனர். இங்கு வெண்மை நிறமுள்ளதும் கறுப்பு நிறமுள்ளதுமான கடல் வாத்துகள் மாத்திரமே வாழ்கின்றன. லட்சத் தீவுகள் நிர்வாக அதிகாரியான திரு. கே. ராதா முண்ணி மீன் வள இலாகா விசேஷ அதிகாரி திரு. மாதவன் ஆகியவர்கள் சமீபத்தில் அந்தப்பறவைத் தீவுக்கு சென்று பார்வையிட்டதில் 'இங்கு மரங்கள் இல்லாததால் இந்தப் பறவைகள் கடற்கரை மணலில் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கின்றன. இந்த முட்டைகள் கோழி முட்டை அளவே உள்ளன. ஆனால் அவற்றின் மேல் செம்புள்ளிகள் காணப்படுகின்றன. சில நண்டுகளும் இத் தீவில் உள்ளன. அவை இந்த வாத்து முட்டைகளை உண்டு வாழ்கின்றன' என்று தெரிவித்தனர்.

## பென்னி அளவில் கருவி

பரீட்சார்த்தமாகத் தயாரிக்கப்படும் முக்குளிப்புக் கூண்டில் பொருத்துவதற்காக பென்னி என்ற பிரிட்டிஷ் காசின் அளவில் சின்னஞ் சிறியதோர் டெலிபோன் கருவியை பிரிட்டிஷ் கடற்படையைச் சேர்ந்த விஞ்ஞானிகள் தயாரித்திருக்கிறார்கள். நீருக்கு அடியில் 120 அடி ஆழம் வரை இதை எடுத்துச் செல்ல முடியும். தாடை அசைவைக் கொண்டு ஒலியை வழங்கி—வாங்கும் உத்தி முறையைக் கையாண்டு இதை அமைத்திருக்கிறார்கள்.

## நாய் வண்டி

ஹாலந்தில் கடைசியாக ஓடிக் கொண்டிருந்த 26 நாய் வண்டிகளுக்கும் விடுதலை அளிக்கப்பட்டுவிட்டது டச்சுக்காரர்களால் பழங்காலத்திலிருந்து உபயோகிக்கப்பட்டு வந்த இந்த நாய் வண்டிகள் அறவே ஒழிக்கப்படுவதற்காக சமீபத்தில் ராணி ஜூலியானா ஒரு சட்டத்திற்கு ஒப்புதல் அளித்தார்.

நாய் வண்டிகள் ஒழிக்கப்பட வேண்டுமென்று 1912ம் ஆண்டு முதலே கிளர்ச்சிகள் நடந்து வந்ததின் காரணமாக அந்த ஆண்டில் 50,000 ஆக இருந்த வண்டிகள் படிப்படியாகக் குறைந்து 1955ல் 475ஆகக்குறைந்தது. 1961ல் நூறு வண்டிகளுக்கும் குறைவாகவே இருந்தது.

இக்கிளர்ச்சியை நடத்தியவர்கள் தற்போது பண்ணைகளுக்குவெளியே காவல் புரிய சதா கட்டிவைக்கப்பட்டு இருக்கும் 50,000 நாய்களுக்கும் விடுதலை அளிக்க வேண்டும் என கிளர்ச்சி நடத்தி, 10,000 நாய்களுக்கு விடுதலை தேடித் தந்திருக்கின்றனர். காவல் வேலை செய்ய நாய்களை உபயோகிக்கக் கூடாது என்பது இவர்கள் வாதமல்ல. ஆனால் இந்த வாயில்லா ஜீவன்களுக்கு போதுமான ஓய்வும், வசதிகளும், பாதுகாப்பும் அளிக்க வேண்டுமென்பது தான் இவர்களது கோரிக்கை.

★

## தலைவருக்கு ஆசி

சிறந்த தத்துவ மேதையும் பேரறிஞருமான டாக்டர் இராதாகிருஷ்ணன் இந்தியக் குடியரசுத் தலைவர் பதவியை அடைந்தது குறித்து மகிழ்ந்து தருமபுர ஆதீனத் தலைவர் கைலைக்குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமண்ய ஞானசம்பந்த தேசிக பரமாச்சார்ய சுவாமிகள் சார்பில் டில்லி ராஷ்டிரபதி மாளிகையில் பொன்னாடை போர்த்தப் பெற்றது. ஆதீனகர்த்தரின் பிரதிநிதிகளாக திரு எம். நெல்லையப்பன், எம். எஸ். பி. சண்முகம் ஆகிய இருவரும் இராதாகிருஷ்ணனைச் சந்தித்து மாலையணிவித்து விபூதி பிரசாதம் வழங்கினர். பின்னர் ஆதீன வழக்கப்படி மகாசந்நிதானம அனுப்பிய பொன்னாடையை திரு. நெல்லையப்பன் ராஷ்டிரபதிக்குப் போர்த்தினார். வந்திருந்த இப்பிரதிநிதிகளுடன் ராஷ்டிரபதி தமிழிலேயே முழு நேரமும் பேசித் தனது நன்றியைச் சந்நிதானத்திற்குத் தெரிவிக்கச் சொன்னது குறிப்பிடத்தக்கதாகும்.

## பள்ளி ஆண்டுவிழா

துறையூரை அடுத்த ரங்கநாதபுரத்தில் உள்ள ஸ்ரீகிருஷ்ணம்மா உயர்தர ஆரம்பப் பள்ளியின் 20வது ஆண்டுவிழா, பள்ளிக்கூட உதவி இன்ஸ்பெக்டர் திரு. எஸ். ரத்தினம் தலைமையில் நடந்தது. திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கச் செயலாளர் திரு. ரா. நீலமேகம் 'கல்வியின் அவசியம்' என்பது பற்றியும் புலவர் திரு. அரசப்பன் 'இலக்கிய இன்பம்' என்பது பற்றியும் பேசினர். மற்றும் திரு. இராதாகிருஷ்ணன், திரு. கே. பரமசாமி முதலியோரும் பேசினர். 'வஞ்சனையின் முடிவு' என்ற இசை நாடகமும் 'அன்பின் எல்லை' என்ற நாடகமும் நடைபெற்றது. நாடகத்தைத் தயார் செய்த ஆசிரியர் திரு. ராஜகோபாலையும் அவருடைய மனைவியையும் பாராட்டிய பள்ளி மேலாளரும் திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத்தலைவருமான திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் நாடகத்தில் நடித்த மாணவர்களுக்குப்பரிசுகள் வழங்கினார். தலைமை ஆசிரியர் திரு. வி. சுந்தரராஜன் நன்றி புகன்றார்.

## குளித்தலை டி. மு. கோ
S. C. 44/62

கு. தா. பணிக்கம்பட்டி வெங்கட்டராம ரெட்டியார் — வாதி

கு. தா. குமாரமங்கலம் K. S. நயினா முகமது ராவுத்தர் மகன் இஸ்மாயில் —பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி ரூ. 176—50க்கு செய்த தாவா 5-6-62ல் ஈரங்கி அன்று ஆஜராகத் தவறினால் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு ஏற்படும்.

S. R. நாராயணமூர்த்தி அய்யர்,
1/4952/17 வக்கீல்.

## புதுக்கோட்டை டி. மு. கோ
S. C. 1818/61

V. சிதம்பரம் — வாதி

புதுக்கோட்டை டவுன் தெற்கு ராஜ வீதியிலுள்ள (தகப்பனார் பெயர் தெரியாது) சின்னையா நாடார் — பிரதிவாதி

வாதி உமது பேரில் கைமாத்து பாபத்தில் ரூ. 200க்கு ஷை கோர்ட்டில் செய்த தாவா 31-5-62ல் டயம். அன்று காலை நீர் ஆஜராகாவிடில் எக்ஸ் பார்ட்டி செய்து பைசல் செய்யப்படும்.

S. V. ராமச்சந்திரய்யர்,
2/4974/18 அட்வகேட்.

## விருத்தாசலம் டி.மு.கோ
S. C. 379/1962

வி. தா. ஆதியூர் கிராமம் V. முத்து கிருஷ்ண பிள்ளை — வாதி

கூத்தகுடியைச் சேர்ந்த மகமதிய பேட்டை K. S. ஸையத் அமீர் சாயபு — பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டின் பேரில் ரூ. 98—50 கிடைக்க தாவா செய்து 31-5-62ல் ஈரங்கி. ஆக்ஷேபணை யிருந்தால் அன்று காலை 10 மணிக்கு ஆஜராகி தெரிவிக்காவிடில் எக்ஸ்பார்டி தீர்ப்பு செய்யப்படும்.

R. வீரராகவாச்சாரியார்,
3/4975/19 அட்வகேட்.

| Previous Year | Liabilities | | Amount |
|---|---|---|---|
| | 8. ACCEPTANCES—ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS (PER CONTRA) Nil | | |
| | 9. PROFIT AND LOSS:— | | |
| | Profit as per last Balance Sheet Rs. 19,584 76 | | |
| | Less Appropriations thereof :— | | |
| | (a) Dividends Rs. 4,000 00 | | |
| | (b) Reserve fund as per sec. 17 of the Banking Companies Act 1949. " 6,052 15 | | |
| | (c) Income-tax Reserve " 8,451 61 | | |
| | (d) Legal Adviser's Fees " 100 00 | | |
| | (e) Bonus to Staff " 981 00 | | |
| | " 19,584 76 | | |
| 19,584 76 | 10. ADD PROFIT FOR THE YEAR BROUGHT FROM THE PROFIT & LOSS ACCOUNT ... | | 5,209 44 |
| 0,37,092 75 | TOTAL ... | | 5,52,924 41 |

| Previous Year | Assets | | Amount |
|---|---|---|---|
| | Endorsements and other obligations as per contra Nil | | |
| | 8. PREMISES LESS DEPRECIATION Nil | | |
| | 9. FURNITURE AND FIXTURES LESS DEPRECIATION : | | |
| 4,788 38 | Original cost till last year ... | 4,788 38 | |
| | Addition during the year Nil | | |
| 3,650 45 | Less depreciation to date ... | 3,718 45 | 1,069 93 |
| 1,137 93 | | | |
| | 10. OTHER ASSETS, INCLUDING SILVER : | | |
| 12,833 45 | i. Income-tax advance ... | 3,846 25 | |
| 877 00 | ii. Stock of Books and Forms ... | 652 50 | |
| | iii. Court expenses recoverable Nil | | |
| 100 00 | iv. Rent Advance ... | 100 00 | |
| 9,137 57 | v. Interest receivable on loans and investments ... | 7,518 28 | |
| 3,622 05 | vi. Income-tax deducted at source on Interest on Government Securities ... | 1,027 42 | |
| 3 00 | vii. Suspense : value of Postage stamps ... | 3 00 | 13,147 45 |
| | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS : Nil (Stating mode of valuation) | | |
| | 12. PROFIT & LOSS : | | |
| | Note : 4% 1967 Madras Government Bonds for Rs. 25,000 and 4% 1968 Madras Government Bonds for Rs. 5,000, totaling Rs. 30,000 are ear-marked for Staff Provident Fund. | | |
| 10,37,092 75 | TOTAL ... | | 5,52,924 41 |

3. No amount has been set apart for Incometax in the appropriation statement since the tax liability may not exceed the existing provision under that head.

4. Messrs. N. Ramalingam Chettiar and Mothi R. Rajamannar Chettiar are the retiring directors by rotation this year and they are eligible for re-election. Sri. P. M. Thammanna Chettiar, who has also to retire by rotation this year, and Sri T. R. Sriramulu Chettiar ceased to be directors with effect from 27—9—61 on account of their failure to comply with the provisions of Section 283 (1) (g) of the Indian Companies Act 1956 in the matter of attending the mettings of the Board of Directors and their seats have been kept vacant to be filled up in the Annual General Meeting.

5. Eleven meetings of the Board of Directors were called for and conducted.

6. The directors thank the members and the public for their kind patronage and co-operation and solicit the same for the current year also. All the members are requested to attend the metting.

on behalf of the Board of Directors,

(Sd) Mothi Sriramulu Chetty,
President.
(Authorised by the Board)

Tiruchirappalli,
27—1—62.

# Profit and Loss Account for the 30th year ended 31—12—1961.

| Previous Year Rs. nP. | EXPENDITURE | | AMOUNT Rs. nP. |
|---|---|---|---|
| 38,687 22 | 1. Interest paid on deposits, borrowings etc. ... | | 21,900 14 |
| | 2. Salaries, allowances and Provident Fund to Staff : | | |
| 2,613 96 | (i) To the Executive Officer-Secretary | 2,881—43 | |
| 11,430 05 | (ii) To the Staff ... | 11,427—42 | 14,308 85 |
| 14,044 01 | | | |
| 860 00 | 3. Directors' and Local Committee Members' Fees and Allowances ... | | 595 00 |
| 1,292 60 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc. ... | | 1,527 29 |
| | 5. Law Charges ... | | 30 00 |
| 108 70 | 6. Postage, Telegrams and Stamps ... | | 186 99 |
| 250 00 | 7. Auditor's Fees ... | | 250 00 |
| 72 00 | 8. Depreciation on and repairs to the Banking Company's property ... | | 68 00 |
| 1,012 57 | 9. Stationery and Printing Advertisements etc. ... | | 721 59 |
| | 10. Loss from sale of or dealing with non-banking assets ... | | |
| | 11. Other Expenditure : | | |
| 20 00 | (i) Filing fees | 103—00 | |
| 581 70 | (ii) Contingencies | 510—68 | |
| 601 70 | | | 613 68 |
| Nil | (iii) Income-tax paid | Nil | |
| 19,584 76 | 12. Balance of Profit ... | | 5,209 44 |
| 76,513 56 | TOTAL ... | | 45,410 98 |

| Previous Year Rs. nP. | INCOME (Less Provision made during the year for Bad and Doubtful Debts and other usual or necessary provisions) | AMOUNT Rs. nP. |
|---|---|---|
| 75,932 70 | 1. Interest and Discount ... | 44,846 28 |
| 171 25 | 2. Commission, Exchange and Brokerage ... | 193 20 |
| | 3. Rent ... | |
| | 4. Net Profit on sale of investments gold and silver land, premises and other assets, (not credited to Reserve or any particular Fund or account) ... | |
| | 5. Net Profit on revaluation of investment, gold & silver, land premises and other assets (not credited to Reserve or any particular Fund or account) ... | |
| | 6. Income from non-banking assets and profit from sale of or dealing with such assets ... | |
| 409 61 | 7. Other receipts ... | 371 50 |
| | 8. Loss (if any) ... | |
| 76,513 56 | TOTAL ... | 45,410 98 |

DIRECTORS :

Tiruchirapalli, 19—1—62.

மோதி ஸ்ரீராமுலு செட்டி,
பிரசிடெண்ட்.

M. S. Krishnamurthy Chetty, K. M. Varadarajalu,
N. Athinarayana Chetty, Mothi R. Rajamannar Chetty,
N. Ramalingam Chetty, R. Rengaraju Chetty.

M. S. Kumaravelu, Accountant.

A. Krishnamurthy, B. A., Secretary.

AUDITOR'S REPORT :— I have audited the above Balance Sheet of the Trichinopoly Vysya Bank Ltd., Trichinopoly, as at 31—12—61 and also the Profit and Loss Account of the Bank for the year ended on that date and report that:— (1) I have obtained all the information and explanations which to the best of my knowledge and belief, were necessary for the purpose of my audit and have found them to be satisfactory. (2) The transactions of the Bank which have come to my notice have been within the powers of the bank. (3) In my opinion proper books of account as required by law have been kept by the Bank so for as appears from my examination of those books. (4) The Bank's Balance Sheet and Profit and Loss Account dealt with by this report are in agreement with the books of accounts and (5) In my opinion and to the best of my information and according to the explanations given to me, the said accounts give the information required by the Companies Act 1956 in the manner so required for Banking Companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the state of the affairs of the Bank as st 31—12—61 and the Profit and Loss Account gives a true and fair view of the profit for the year ended upon that date.

Tiruchirapalli,
27—1—1962.

A. GANESA Iyer,
Chartered Accountant.
TIRUCHIRAPALLI

# விண்வெளி வெற்றி

அமெரிக்கா தனது மூன்றாவது வான வெளி மனிதனை புறவெளியில் வெற்றிகரமாக அனுப்பி வைத்தது. அவர் உலகை 3 முறை வலம் வந்துவிட்டு பூமிக்கு திரும்பும் ராக்கெட்டை இயக்கிவிட்டார்.

அரோரா-7 என்ற வான வெளிக் கப்பலில் மால்காம் ஸ்காட் கார்பெண்டர் என்ற வானவெளி மனிதர் புறவெளிக்கு அனுப்பப் பட்டார். அவர் உலகை மூன்று முறை வலம் வர அனுப்பப் பட்டார்.

"என் நிலைமை நன்றாக இருக்கிறது. பிரமாதமான தேகஆரோக்கியத்தோடு இருக்கிறேன்" என்று அவர் புறவெளியிலிருந்து தகவல் அனுப்பினார்.

37 வயதான கார்பெண்டர் வானவெளிக் கப்பலில் ஏறி உட்கார்ந்த ஒரு மணி 50 நிமிடங்கள் கழித்து, அது புறவெளிக்கு செலுத்தப் பட்டது.

ராக்கெட் மேலே அனுப்பப் பட்ட 3 மணி 10 நிமிடங்கள் கழித்து, புற வெளியிலிருந்து கார்பெண்டர் தகவல் அனுப்பினார்.

அவர் புறவெளிக் கப்பலை இயக்கிச் செல்வதாக இங்கு அறிவிக்கப் பட்டது. புறவெளியிலுள்ள கார்பெண்டரோடு நடத்திய சம்பாஷணை பதிவு செய்யப்பட்டு வானொலியில் ஒலி பரப்பப் பட்டது. அமெரிக்க வான வெளி மனிதர் உலகை வெற்றிகரமாக மூன்று முறை சுற்றி விட்டு, பூமிக்குத் திரும்புவதற்கான ராக்கெட்டை இயக்கி விட்டார் என்று அறிவிக்கப்பட்டது.

கார்பெண்டர் உலகை ஒரு முறை வலம் வந்து விட்டு இரண்டாவது சுற்றை ஆரம்பிக்கும் போது, தனது வானவெளிக் கப்பலின் வால் பக்கத்தில் பல வர்ணங்கள் கொண்ட ஒரு பலூனையும் பிளாஸ்டிக் வர்ண காகிதங்களையும் பறக்க விட்டார்.

80,000 மைல் வானவெளி சுற்றுப் பயணத்தை, முடித்துக் கொண்டு திரும்புகையில் கூண்டு நிலத்தில் இறங்க வேண்டிய இலக்கை விட்டு நகர்ந்து விட்டதால் கார்பெண்டர் ப்யோர்படாரிகோவுக்கு வடகிழக்கில் 135 மைல் தொலைவில் அட்லாண்டிக் கடலில் விழுந்தார். 53 நிமிட நேரம் கார்ப்பெண்டரைப் பற்றி தகவல் எதுவும் கிடைக்காததால் ஆராய்ச்சியாளர்களுக்குக் கவலை அளித்தது. தேடிக் கண்டு பிடிக்க கப்பல்களும் விமானங்களும் அனுப்பப்பட்டன.

நெப்டியூன் என்ற கடற்படை கப்பல், வானவெளிக் கூண்டும், அதன் அண்டையில் உயிர்க் காப்பு மிதவையில் கார்பெண்டர் அமர்ந்திருப்பதையும் கண்டு பிடித்து தகவல் அளித்தது. அதன் பிறகு கடற்படை தவளை மனிதர்கள் இருவர் உதவியுடன் கார்பெண்டர் ஒரு ஹெலிகாப்டர் விமானத்தில் ஏற்றப்பட்டு, கப்பலுக்குக் கொண்டு வரப்பட்டார். அங்கு கார்பெண்டர் வைத்திய சோதனை செய்யப் பட்டார்.

37 வயதுள்ள கார்ப்பெண்டர் கடலில் உயிர்க்காப்பு மிதவையில் சுமார் 3 மணிநேரம் கழித்தார். மீட்கப்பட்டபோது அவர் "நான் நல்லபடியாகத்தான் இருக்கிறேன்" என்று மகிழ்ச்சி பொலிய தெரிவித்தார்.

அதிபர் கென்னடி டெலிபோன் மூலம் நேரிடையாக கார்ப்பெண்டருடன் பேசி, வான வெளிப் பயணத்தை வெற்றியாக முடித்ததற்காகவும் இடையில் ஏற்பட்ட ஆபத்திலிருந்து மீண்டதற்காகவும் பாராட்டும் மகிழ்ச்சியும் தெரிவித்தார்.

கார்ப்பெண்டருக்கு தேசிய வானவெளி பாராட்டுப் பதக்கம் அளிக்கப்பட்டதாக அமெரிக்க அதிபர் மாளிகைச் செய்தி தெரிவித்தது.





Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Single copy six nP. ANNUAL SUBSCRIPTION INCLUDING 4 SPECIAL NUMBERS: For INDIVIDUALS Rs. 5. For INSTITUTIONS Rs. 10